# சிவபுஜங்கம்

(சிவன் பாம்புகளைத் தமக்கு மிகவும் உகந்த அணிகலன்களாகக் கொண்டிருப்பதால் இந்தச் ச்லோகங்கள் புஜங்கப்ராயாத விருத்தத்தில் அமைக்கப்பட்டுள்ளது.)

**க3லத்3தா3ன க3ண்ட3ம் மிலத்3ப்4ருங்க3 ஷண்டம்**
**சலச்சாரு சுண்ட3ம் ஜ3க3த் த்ராண சௌண்ட3ம் ।**
**கனத்3த3ந்தகாண்ட3ம் விபத்3ப4ங்கசண்ட3ம்**
**சிவப்ரேம்பிண்ட3ம் ப4ஜேவக்ரதுண்ட3ம் ॥** 1

கருவண்டுகளின் குழாம் மொய்த்திடும் மதஜலம் வழியும் நெற்றியை யுடையவரும், எழிலுடன் அசையும் தும்பிக்கையை உடையவரும், உலகையெலாம் காப்பாற்றும் ஆற்றல் கொண்டவரும், பிரகாசமான தந்தங்களையுடையவரும், இன்னல்களை அறவே துடைப்பவரும், சிவபெருமானின் அன்பே உருவெடுத்ததென விளங்குபவருமான ஆனை முகத்தானை வணங்குகிறேன்.

**அனாத்3யந்தமாத்3யம் பரம் தத்த்வமர்த்2ம்**
**சிதா3காரமேகம் துரீயம் த்வமேயம் ।**
**ஹரிப்3ரஹ்ம ம்ருக்3யம் பரப்3ரஹ்மரூபம்**
**மனோவாக3தீதம் மஹ: சைவமீடே3 ॥** 2

ஆதியுமந்தமும் இல்லாதவரும், எல்லாவற்றிற்கும் முதல்வராகவும், பரம தத்துவத்தின் உண்மைப் பொருளாக அறிவொளியாய், ஒன்றாய், விழிப்பு, கனவு, துயில் முதலிய நிலைகளுக்கப்பால் சாக்ஷியாக இருப்பவரும், அளவிலா சக்தி படைத்தவரும், ஹரி, பிரஹ்மா முதலியவர்களாலும் காண இயலாதவரும், பரப்ரஹ்மமாய் விளங்குபவரும், மனதுக்கும், சொல்லுக்கும் அப்பாற்பட்டவருமான சிவபெரும் ஜோதியை போற்றுவேன்.

**ஸ்வசக்த்யாத3 சக்த்யந்த ஸிம்ஹாஸனஸ்த2ம்**
**மனோஹாரி ஸர்வாங்க ரத்னோருபூ4ஷம் ।**
**ஜ3டாஹிந்து3 க3ங்கா3ஸ்தி2 சம்யாகமௌலிம்**
**பராசக்தி மித்ரம் நும: பஞ்சவக்த்ரம் ॥** 3

ஆதிசக்தியாம் ஸ்வசக்தியாம் ஸிம்ஹாஸனத்தில் வீற்றிருப்பவரும், காண்போர் மனத்தைக் கொள்ளை கொள்ளும் எழிலுடன் கூடிய அங்கங்களில் ரத்னமயமான அணிகலன்களை அணிந்து திகழ்பவரும், சடை, அரவு, நிலவு, கங்கை, என்பு முதலியவைகளைத் தாங்கி நிற்கும் முடியையுடையவரும், பராசக்தியின் பங்காளனுமான ஐந்து முகத்தானை வணங்குகிறோம்.

**சிவேசானதத்பூருஷா கோ4ரவாமா-**

**தி3பி4: பஞ்சபி4ர் ஹ்ருன்முகை2: ஷட்3பி4ரங்கை3: |**
**அநௌபம்ய ஷத்ரிம்சதம் தத்வவித்3யா-**
**மதீதம் பரம்த்வாம் கத2ம் வேத்தி கோவா ||** 4

சிவ ஸ்வரூபத்தை ஹ்ருதயமாயும், ஈசான தத்புருஷ அகோர வாம தேவாதி (ஸத்யோஜாதாதி) ஐந்து ரூபங்களை அங்கங்களாயும் கொண்ட இணையற்றவரே, முப்பத்தாறு தத்துவங்களுக்கும் அப்பாற்பட்டவரே, தங்களை எவர் எங்ஙனம்தான் அறியமுடியும்.

**ப்ரவால ப்ரவாஹ ப்ரபா4சோணமர்த4ம்**
**மருத்வந் மணி ஸ்ரீ மஹ: ச்யாமமர்த4ம் |**
**குணஸ்யூதமேதத்3வபு: சைவமந்த:**
**ஸ்மராமி ஸ்மராபத்தி ஸம்பத்திஹேதும் ||** 5

பவழம் போல் சிவந்ததான ஒரு பாதியும், இந்திர நீலமணி போன்ற கருத்ததானவோர் பாதியுடனும் கூடியதும், குணங்களுடன் விளங்குவதுமான தங்கள் ஸ்வரூபத்தை அர்த்த கர்மாதிகளை அடையும் பொருட்டு தியானிக்கிறேன்.

**ஸ்வஸேவாஸமாயாத தேவாஸுரேந்த்ரா-**
**நமந்மௌலி மந்தா3ரிமாலாபி4ஷிக்தம் |**
**நமஸ்யாமி சம்போ4 பதா3ம்போ4ருஹம் தே**
**ப4வாம்போ4தி போதம் ப4வானீவிபா4வ்யம் ||** 6

தங்களை வணங்கும் பொருட்டு தங்கள் கிரீடங்களிலுள்ள மந்தார மலர் மாலைகளால் தேவர்களும், அசுரர்களும் வருடும் தங்கள் திருவடித்தாமரைகளை பிறப்பிறப்பென்னும் சம்சாரக்கடலைக் கடக்க ஹேதுவாயும், பவானியால் பூஜிக்கப் பட்டதுமாகிய தங்கள் திருவடித்தாமரைகளைத் தியானம் செய்கிறேன்.

**ஜ்2க3ந்நாத2 மந்நாத2 கௌ2ரீஸநாத2**
**ப்ரபந்நானுகம்பின் விபந்நார்த்திஹாரின் |**
**மஹ:ஸ்தோம மூர்த்தே ஸமஸ்தைகபந்தோ4**
**நமஸ்தே நமஸ்தே புனஸ்தே நமோஸ்து ||** 7

உலகங்களுக்கெல்லாம் தலைவனே, எனையாட்கொள்ளும் தலைவா, கௌரியுடன் கூடி விளங்குபவரே, தங்களைச் சரணென நாடியவரிடம் அருள்பாலிப்பவரே இன்னல்களையெல்லாம் நீக்குபவரே; புகழ்களுக்கெல்லாம் உறைவிடமானவரே, உலகிலுள்ளோர் யாவருக்கும் ஒரே சுற்றமாய் விளங்குபவரே, தங்களுக்கு'நமஸ்காரம் - மீண்டும் மீண்டும் நமஸ்காரம்.

**விரூபாக்ஷ விச்வேச விச்வாதி3 தே3வ**

**த்ரயீமூல சம்போ4 சிவ த்ரயம்ப3கத்வம் ।**
**ப்ரஸீத3 ஸ்மர த்ராஹி பச்யாவமுக்த்யை**
**க்ஷமாம் ப்ராப்நுஹி த்ரயக்ஷமாம்ரக்ஷமோதா3த் ॥** 8

விருபாக்ஷ, விச்வேச, சகலதேவதைகளுக்கும் மேலானவரே, வேதங்களுக் கெல்லாம் மூலமானவரே சம்போ, சிவ, த்ரயம்பக ! எளியேன்பால் அருள் புரிக, ஏழையை நினைமின், என் - குற்றங்களை மன்னித்து மோக்ஷத்தையளிப்பீராக, முக்கண்ணே, அன்புடன் எனை ஆட்கொள்வீர்.

**மஹாதே3வ தே3வேச தே3வாதி3 தே3வ**
**ஸ்மராரே புராரே யமாரே ஹரேதி ।**
**ப்3ருவாண: ஸ்மரிஷ்யாமி ப4க்த்யா ப4வந்தம்**
**ததோ மே த3யாசீல தே3வ ப்ரஸீத3 ॥** 9

மஹா தேவ, தேவேச, தேவாதிதேவ, காமனை எரித்தவனே, திரிபுரங்களையும் எரித்தவனே, யமனை ஒடுக்கினவரே, ஹரா, என்று உன்னைப்போற்றி, பக்தியுடன் உம்மை ஸ்மரிப்பேன். ஆதலின் தயாளனான தாங்கள் என்பால் கருணை செய்தல் வேண்டும்.

**த்வத3ன்ய: சரண்ய: ப்ரபந்நஸ்ய நேதி**
**ப்ரஸீத3 ஸ்மரந்நேவ ஹன்யாஸ்து தை3ன்யம் ।**
**ந சேத்தே ப4வேத்3ப4க்த வாத்ஸல்ய ஹானி -**
**ஸ்ததோ மே தயாலோ ஸதா3 ஸந்நிதே4ஹி ॥** 10

தங்களை சரணடைந்தவர்களுக்கு வேறு துணை யென்பதில்லாததால், இடுக் கண்களில் அல்லல்படும் என்பால் அருள்பாலிப்பீராக. அங்ஙானம் அருள் செய்யாவிடில், மெய்யன்பர்களின் பால் வாத்ஸல்யம் உடையவரெனும் தங்கள் புகழ் எங்ஙனம் ஓங்கும்? ஆதலின், அருட்பெருங்கடலே என்பால் தயை செய்வீராக.

.

**அயம்தா3ன காலஸ் த்வஹம் தா3னபாத்ரம்**
**ப4வானேவ தா3தா த்வத3ன்யம் ந யாசே: ।**
**ப4வத்3ப4க்திமேவ ஸ்தி2ராம் தே3ஹி மஹ்யம்**
**க்ருபாசீல சம்போ4 க்ருதார்தோ2ஸ்மி தஸ்மாத் ॥** 11

இதுவே அருளெனும் கொடையை வழங்க தகுந்த தருணம். அடியேனே அக்கொடையை ஏற்கத் தகுதிபெற்றவன். கொடைவள்ளலும் தாங்களே. தங்களை யன்றி வேறெவரிடமும் அருளை யாசியேன். தங்கள் பால் ஸ்திரமான பக்தியை எனக்கு அருள்வீராக. அருளாளா, சம்போ, தங்கள் பக்தியால்தான் க்ருதார்த்தனாவேன்.

.

**பசும் வேத்ஸி சேந்மாம் தமேவாதி4ரூட4:**

**கலங்கீதி வா மூர்த்4னி த்3த்ஸே தமேவ ।**
**த்3விஜி3ஹ்வ: புன ஸோடபி தே கண்ட2 பூ4ஷா**
**தவத3ங்கீ3க்ருதா: சர்வேடபி த4ன்யா: ॥** 12

என்னைத் தாங்கள் பசு என்று கருதினால், என்னைத் தங்கள் வாகனமாய் ஏற்றுக்கொள்ளுங்கள். களங்கங்களுடன் கூடியவனாக என்னைக் கருதுவீரானால், என்னைத் தங்கள் சிரசில் அணிந்து கொள்ளுங்கள். நாவிரண்டு படைத்தவனாக என்னைக் கருதுவீரானால், தங்கள் கழுத்துக்கு என்னை அணிகலனாக ஏற்றுக் கொள்ளுங்கள். ஹே சர்வ! தங்களால் ஏற்கப்பட்டவர்களெல்லாம் எத்தனை குறைபாடுள்ளவர்களாயினும், மேன்மை பெற்றவரே.

**ந சக்றோமி கர்தும் பரத்3ரோஹலேசம்**
**கத2ம் ப்ரீயஸே த்வம் ந ஜா3னே கி3ரீச ।**
**ததா2ஹி ப்ரஸந்நோடஸி கஸ்யாபி காந்தா -**
**ஸுதத்3ரோஹிணோ வா பித்ருத்3ரோஹிணோ வா ॥** 13

பிறருக்குத் துரோகமென்பதை லவலேசமும் செய்யவல்லேன் அல்லேன். அங்ஙனமிருக்க என்பால் அன்பு கொள்ளாததேன்? மனைவிக்கும், மகவுக்கும், தந்தைக்கும் துரோகம் செய்தவர்களிடமும் தாங்கள் அன்பு செலுத்தவில்லையா?

**ஸ்துதிம் த்4யானமர்சாம் யதா2வத்3 வித4ரதும்**
**ப4ஜ3ந்தப்ய ஜா3னன் மஹேசாவலம்பே3 ।**
**தரஸந்தம் ஸுதம் த்ராதுமக்3ரே ம்ருகண்டோ3ர்**
**யமப்ராண நிர்வாணம் த்வத் பதா3ப்3ஜம் ॥** 14

தங்களை புகழ்வதற்கும், தியானிப்பதற்கும், முறைப்படி அர்ச்சிப்பதற்கும் இயலாதவனாய் தங்களையே சரண்புகுந்தேன். மகேச, மிருகண்டு முனிவரின் புதல்வனான மார்க்கண்டேயனுக்கு பயத்தையுண்டாக்கிய யமன் உயிரையும் சிதற அடித்ததல்லவா தங்கள் திருவடித்தாமரை.

**சிரோத்3ருஷ்டி ஹ்ருத்3ரோக3 சூலப்ரமேஹ -**
**ஜ்3வரார்சோ ஜ2ராயக்ஷ்ம ஹிக்கா விஷார்தான் ।**
**தவமாத்3யோ பி4ஷக்3பே4ஷஜ3ம் ப4ஸ்ம சம்போ4**
**தவமுல்லாக4யா ஸ்மான் வபுர் லாக4வாய ॥** 15

சிரசு, கண்கள், இருதயம் முதலியவற்றின் நோய்களையும், மலமூத்ராசயங்களின் நோய்களையும், ஜ்வரம், மூப்பு, காசம், விக்கல் முதலிய வியாதிகள் தீர்க்க மருத்துவர் தாங்களொருவரே. மருந்தும் தாங்கள் அணியும் திருநீறே. எங்கள் சரீரங்கள் பிணியற்று லாகவத்துடனிருக்குமாறு தாங்கள் எங்களை பிணிகளி னின்றும் காப்பாற்றுவீராக.

**த3ரித்3 ரோடஸ்யப4த்5 ரோடஸ்மி ப4க்3னோடஸ்மி தூ3யே**

**விஷண்ணோ஽ஸ்மி ஸந்நோ஽ஸ்மி கி2ந்நோ஽ஸ்மி சாஹம் ।**
**ப4வான் ப்ராணினா மந்தராத்மாஸி சம்போ4**
**மமார்தி4ம் ந வேத்ஸி ப்ரபோ4 ரக்ஷ மாம் த்வம் ॥** 16

நான் தரித்திரன், க்ஷேமத்தையிழந்தவன், மனமுடைந்தவன், சோகத்தால் வாடியவன், நொடித்தேன், துடித்தேன். தாங்கள் சர்வ பிராணிகளிடத்திலும் அந்தர்யாமியாக விளங்குபவர். என் மனத்துயரை நீர் நன்கறிவீர். ஆதலின் என்னை ரக்ஷிப்பீராக.

**த்வத3 க்ஷணோ: கடாக்ஷ: பதேத் த்ரயக்ஷ யத்ர**
**க்ஷணம் க்ஷமா ச லக்ஷ்மீ: ஸ்வயம் தம் வருணாதே ।**
**கிரீடஸ்பு2ரச் சாமரச் ச2த்ர மாலா -**
**கலாசீ க3ஜ3க்ஷௌம பூ4ஷாவிசேஷை: ॥** 17

முக்கண்ணனே, எவனிடம் தங்கள் கடைக்கண்பார்வை பதிந்திடுமோ, அவனை அந்த க்ஷணமே பூதேவியும், ஸ்ரீதேவியும் நாடிவருவார்கள். கிரீடமும், ஒளிமிக்க சாமரங்களும், குடையும், மாலைகளும், யானைகள், பட்டாடைகள், ஆபரணங்கள் இவைகளுடன் லக்ஷ்மீதேவி அவனை வந்தடைவாள்.

**ப4வான்யை ப4வாயாபி மாத்ரே ச புத்ரே**
**ம்ருடா3ன்யை ம்ருடா3யாப் யக4 க4ன்யை மக2க்4நோ ।**
**சிவாங்க்3யை சிவாங்கா3ய குர்ம: சிவாயை**
**சிவாயாம்பி3காயை நமஸ்த்ரயம்ப3காய ॥** 18

ஜகன்மாதாவாகிய பவானிக்கும், ம்ருடானிக்கும் பாபங்களை போக்கடிப்பவளுக்கும், சிவனுடைய உடலில் பாதியிடம் பெற்றவளுக்கும், சிவசக்தியாய் விளங்கும் அம்பிகைக்கும், ஜகத்பிதாவான பவனுக்கும், ம்ருடனுக்கும், தக்ஷன வேள்வியை அழித்தவர்க்கும், பராசக்தியை பாதி உடலில் தரித்தவருக்கும், த்ரயம்பகருக்கும் வணக்கம்.

**ப4வத்3 கௌ3ரவம் மல்லகு4த்வம் விதி3த்வா**
**ப்ரபோ4 ரக்ஷ காருண்ய த்3ருஷ்ட்யானுகம் மாம் ।**
**சிவாத்மானுபா4வஸ்துதாவக்ஷமோ஽ஹம்**
**ஸவசக்த்யா க்ருதம் மே஽லபராத4ம் க்ஷமஸ்வ ॥** 19

தங்கள் மஹிமையையும், என் எளிமையையும் கருதி, கருணாகடாக்ஷத்தினால் தங்களை நாடிய என்னை ஆட்கொள்ளுவீராக. என் குற்றங்களனைத்தையும் பொருத்தருள்வீராக.

**யதா3 கர்ணரந்த்4ரம் ப்ரஜே3த் காலவாஹ -**

**த்3விஷத்கண்ட2 க4ண்டா க4ணாத்காரநாத: ।**
**வ்ருஷாதீ4 சமாருஹ்ய தை3வோபவாஹ்யம்**
**ததா3 வத்ஸ மா பீ4ரிதி ப்ரீணய த்வம் ॥** 20

யமன் ஏறிவரும் பரியின் கழுத்தில் ஒலிக்கும் பயங்கரமான மணியின் ஒலி என் செவியில் கேட்கும் போது தாங்கள் ரிடப வாகனத்திலமர்ந்து வந்து என்னை நோக்கி, குழந்தாய்! அஞ்சேலென அன்புடன் அருள்புரிவீராக.

**யதா3 தா3ருணா பா4ஷணா பீ4ஷணா மே**
**ப4விஷ்யந்த் யுபாந்தே க்ருதாந்தஸ்ய தூ3தா: ।**
**ததா3 மன்மனஸ் த்வத் பதா3ம்போ4ருஹஸ்த2ம்**
**கத2ம் நிஸ்சலம் ஸ்யாந் நமஸ்தேऽஸ்து சம்போ4 ॥** 21

யம தூதர்கள் பயங்கரமான சப்தங்களுடன் என்னையணுகும்போது, தங்கள் திருவடித்தாமரையில் நன்கு பதிந்திருக்கும் என் மனம் எங்ஙனம் கலங்காமல் இருக்கும். (அதனால் இப்பொழுதிலிருந்தே தங்களை வணங்கி என் மனத்தை உங்கள் பாதகமலங்களில் லயிக்கச் செய்கிறேன். அதனால் யம தூதர்கள் வரும் நேரத்தில் எனக்கு யாதொரு துன்பமும் நேரிடாது.)

**யதா3 து3ர்நிர்வார வ்யதோ2ஹம் சயானோ**
**லுட2ந்நிச்வஸந் நி: ஸ்ருதாவ்யக்தவாணி: ।**
**ததா3 ஜ3ஹ்நுகன்யா ஜ3லாலங்க்ருதம் தே**
**ஜ3டாமண்ட3லம் மந்மனோமந்த்3ரம் ஸ்யாத் ॥** 22

குணப்படுத்த இயலாது நோய்வாய்ப்பட்டு, மரணப் படுக்கையில் புரண்டு, மேல்மூச்சுடன் கூடி பேசவும் முடியாமல் அல்லல்படும்போது, கங்கையுடன் மிளிரும் தங்கள் ஜடாமண்டலம் என் இரு தயத்தில் கோயில் கொண்டிருக்குமாக.

**யதா3 புத்ரமித்ராத3 யோ ஸத் ஸகாசே**
**ருத3ந்த்யஸ்ய ஹா கீத்3ருசீயம் தசேதி ।**
**ததா3 தே3வதே3வேச கௌ3ரீச சம்போ4**
**நமஸ்தே சிவாயேத் யஜ3ஸ்ரம் ப்3ருவாணி ॥** 23

புத்ரர்களும், மித்ரர்களும் மரணதசையிலிருக்கும் என்ன ருகில், "அந்தோ, இதென்ன கஷ்டம்" என்று கதறி ஓலமிடும் போது, தேவர்களுக்கெல்லாம் தலைவரான கௌரீச! "சம்போ, சிவ" என்று என் நாவில் தங்கள் திருநாமம் ஒலிக்குமாக.

**யதா3 பச்யதாம் மாமஸௌ வேத்தி நாஸ்மா -**

நயம் ச்வாஸ ஏவேதி வாசோ ப4வேயு: |
ததா3 பூதி பூ3ஷம் பு'ஜுங்கா வநத்தம்
புராரே ப4வந்தம் ஸ்புடம் பா4வயேயம் || 24

மரணகாலக்தில் என்னைச் சூழ்ந்து கொண்டு என்னைப் பார்ப்பவர்கள் "இவன் நம்மைத் தெரிந்து கொள்ளவில்லை. இதோ, அந்திய ச்வாசம்" என்று கூறும் அத்தருணத்தில் திருநீறு பூசி, அரவுமாலையணிந்து துலங்கும் தங்கள் திருமேனியை ஸ்மரிக்கவேண்டும்.

யதா3 யாதனாதே3ஹ ஸந்தே3ஹ வாஹீ
ப4வேதா3த்ம தே2ஹே நமோஹோ மஹான்மே |
ததா3 காசசீதாம்சு ஸம்காசமீச
ஸ்மராரே வபுஸ்தே நமஸ்தே ஸ்மராணி || 25

இவ்வுடலை விட்டுப்பிரிந்து, யாதனா சரீரத்தை அடைந்து நிற்கும் நிலையில் நிலவொளிபோல் பிரகாசிக்கும் தங்கள் திருவுருவை நான் ஸ்மரிக்கவேண்டும்.

யதா3 பாரமச்சா2யமஸ்தா2நமத்3பி4ர் -
ஜுனைர்வா விஹீனம் க3மிஷ்யாமி மார்க3ம் |
ததா3 தம் நிருந்த4ன் க்ருதாந்தஸ்ய மார்க3ம்
மஹாதே3வ மஹ்யம் மனோக்3ஞம் ப்ரயச்ச2 || 26

கடக்க இயலாததும், வழியெங்கும் நிழலற்றதும், தங்கி இளைப்பாற இடங்களற்றதும், தணணீரற்றதும், நிர்மானுஷ்யமுமான மார்க்கத்தில் யமலோகம் செல்வேனோ அப்போது, தாங்கள் யமலோக மார்க்கத்தில் என்னை வழிமறித்து, எனக்கு இன்பத்தையருளுவீராக.

யதா3 ரௌரவாதி3 ஸ்மரன்னேவ பீ4த்யா
வ்ரஜாம்யத்ர மோஹம் மஹாதே3வ கோ4ரம் |
ததா3 மாமஹோ நாத2 கஸ்தாரயிஷ்யத் -
யநாத2ம் பராதீ4னமர்தே4ந்து3 மௌலே || 27

ரௌரவாதி நரகங்களை நினைத்த மாத்திரத்தில் நினைக்க வொணா பயத்தை யடைந்து நான் துயரப்படும்போது, ஹே, மஹா தேவ, என்னை யார் காப்பாற்றுவர் யமன் கைவசப்பட்ட அனாதையான எனக்குத் துணை யார்? பிறைசூடிப் பெருமானே!

யதா3sச்வேதபத்ராயதாலங்க்4ய சக்தே:
க்ருதாந்தாத்2 ப4யம் ப4க்தவாத்ஸல்ய பா4வாத் |
ததா2 பாஹிமாம் பார்வதீ வல்லபா4ன்யம்
ந பச்யாமி பாதாரமேதாத்3ருசம் மே || 28

ஏக சக்ராதிபதியும், மீறமுடியாத சக்திவாய்ந்தவருமான யமதர்மராஜாவின் ஆணைக்கு பயந்து நான் நடுங்கி நிற்கும்போது, ஹே, பார்வதீவல்லப, தாங்கள் என்னைக் காப்பாற்றுவீராக. தங்களையன்றி வேறு ரக்ஷகனை நான் கண்டறியேன்.

**இதா3னீமிதா3னீம் ம்ருதிர்மே ப4வித்ரீ -**
**த்யஹோ ஸந்ததம் சிந்தயா பீடி3தோsஸ்மி ।**
**கத2ம் நாம மாபூ4ந்ம்ருதௌ பீ4திரேஷா**
**நமஸ்தே க3தீனாம் க3தே நீலகண்ட2 ॥** 29

இத்தருணத்திலோ, எத்தருணத்திலோ, மரணம் நேரிடக்கூடுமெனக் கவலையினால் எக்காலும் கலவரமடைந்து நிற்கும் நான் எப்போது மரண பயமில்லாதிருப்பேன்? ஹே! நீலகண்ட! தங்களையன்றி வேறு கதிகாணாத நான் தங்களை தஞ்சமாய் நமஸ்கரிக்கின்றேன்.

**அமர்யாத3 மேவாஹ மாபா3லவ்ருத்3த4ம்**
**ஹரந்தம் க்ருதாந்தம் ஸமீக்ஷ்யாமி பீ4த: ।**
**ம்ருதௌ தாவகாங்க்4ர்ப்3ஜ திவ்ய ப்ரஸாதா3த்**
**ப4வானீபதே நிர்ப4யோsஹம் ப4வானி ॥** 30

பாலன், வ்ருத்தன் எனும் பாகுபாடின்றி ஆயுளை அபகரிக்கும் யமன் வருகையை நான் எதிர்நோக்கி பயந்து நிற்கிறேன், ஆதலின், பவானீபதியான தங்கள் திருவடித்தாமரைகளை மரணத் தருவாயில் நான் நினைத்து பயமற்றவனாக இருப்பேனாக.

**ஜராஜன்ம கர்பா4தி வாஸாதி3து3: கா2ன்**
**அஸஹ்யானி ஜஹ்யாம் ஜக3ந்நாத2 தே2வ ।**
**ப4வந்தம் விநா மே க3திர்நைவ சம்போ4**
**தயாலோ ந ஜாக3ர்தி கிம் வாத3யா தே ॥** 31

மூப்பு, மறுபிறப்பு, கர்ப்பவாஸம் முதலிய சொல்லொணாத் துயரங்களி லிருந்தும் நான் விடுபட வேண்டும். தங்களையல்லால் வேறு கதிகாணேன் கருணைக் கடலே! தங்கள் அருள் விழித்தெழாததேன்?

**சிவாயேதி சப்3தோ3 நம: பூர்வ ஏஷ**
**ஸ்மரன் முக்திக்ருன் ம்ருத்யுஹா தத்வவாசீ ।**
**மஹேசான மா கா3ன் மனஸ்தோ வசஸ்த:**
**ஸதா3 மஹ்யமேதத் ப்ரதா3னம் ப்ரயச்ச2 ॥** 32

'நமச்சிவாய' என்னும் சப்தம், நினைத்த மாத்திரத்தில் மிருத்யுவை ஒழித்து முக்தியை அளிக்கவல்லது. உயர்ந்ததான தத்துவத்தையும் புகட்டவல்லது, ஆதலின்

'நமச்சிவாய' எனும் தங்கள் நாமம் என் மனதினின்றும் வாக்கிலிருந்தும் என்றும் அகலாதிருக்க வரமருளவேண்டும்,

**த்வமப்யம்ப3 மாம் பச்ய சீதாம்சுமௌலி -**
**ப்ரியே பே4ஷஜம் த்வம் ப4வவ்யாதி4 சாந்தௌ ।**
**ப3ஹுக்லேச பா4ஜம் பதா3ம்போ4ஜபோதே**
**ப4வாப்3 தௌ நிமக்3னம் நயஸ்வாத்3ய பாரம் ॥ 33**

பிறைசூடிப் பெருமானின் பேரணங்கே; தாயே! எனைக் கடைக்கண் பாராய்! இப்பிறப்புப் பிணி நீங்க உனையன்றி மருந்தேது? இன்னல்கள் நிறைந்த இப்பிறவிக்கடலில் மூழ்கித் தவிக்கும் என்னை உன் திருவடிகளெனும் ஓடம் கொண்டு கரைமீட்பாய்.

**அநுத்3 யல்லலாடாக்ஷி வஹ்னிப்ரரோஹை -**
**ரவாம ஸ்புரச்சாரு வாமோருசோபை4: ।**
**அநங்க3 ப்4ரமத்3 போ4கி3 பூ4ஷாவிசேஷை -**
**ரசந்த்ரார்த4 சூடை3ரலம் தை3வதைர் ந: ॥ 34**

அனலைக்கக்கும் நெற்றிக்கண்களில்லாதவரும், இடது பாகத்தில் தேவியைத் தரிக்காதவரும், பாம்புகள் நெளிந்து விளையாடுவதுமான தேகத்தை இல்லாதவரும் முடியில் பிறைச்சந்திரனை தரித்திராதவருமான இதர தேவதைகளால் எமக்குப் பயனென்ன?

**அகண்டே2 கலங்காத3 நங்கே3 பு4ஜங்கா3 -**
**தபாணௌ கபாலாத3பா2லே ந லாக்ஷாத் ।**
**அமௌலௌ சசாங்காதவாமே கலத்ரா -**
**த1ஹம் தே3வமன்யம் ந மன்யே ந மன்யே ॥ 35**

விடமுண்டதனால் கருத்திருக்கும் கழுத்தையுடையவரும், உடலில் சர்ப்பங்களான அணிகளை தரித்தவரும், கையில் கபாலத்தையேந்தியவரும், அக்னியாய் நெற்றிக்கண்ணை உடையவரும், முடியில் பிறை தரித்தவரும், இடப் பாகத்தில் உமையுடன் கூடியவருமல்லாது மற்றொரு தெய்வத்தை நான் நினைக்கவும் மாட்டேன்,

**மஹாதே3வ சம்போ4 கி3ரீச த்ரிசூலிம் -**
**ஸ்தவதீ3யம் ஸமஸ்தம் விபா4தீதி யஸ்மாத் ।**
**சிவாத3ன்யதா2 தை3வதம் நாபி4ஜானே**
**சிவோ஽ஹம் சிவோ஽ஹம் சிவோ஽ஹம் சிவோ஽ஹம் ॥ 36**

மஹாதேவ, சம்போ, கிரீசா, திரிசூலத்தை உடையவனே, இந்த ப்ரபஞ்சம் யாவும் தங்களிடமே தோன்றுவதனால், சிவனான தங்களைக் காட்டிலும் வேறு

தெய்வத்தை யானறியேன். நான் சிவன், நான் சிவன், நான் சிவன், நான் சிவமென மன உறுதி பெற்றேன்.

**யதோऽரஜாயதேத3ம் ப்ரபஞ்சம் விசித்ரம்**
**ஸ்தி2திம் யாதி யஸ்மின்ய தே3வாந்தமந்தே ।**
**ஸ கர்மாதி3ஹீன: ஸ்வயம் ஜயோதிராத்மா**
**சிவோऽஹம் சிவோऽஹம் சிவோऽஹம் சிவோऽஹம் ॥** 37

எவரிடமிருந்து இந்த விசித்ரமான ப்ரபஞ்சம் உண்டாயிற்றோ, எவரிடம் நிலைபெற்றுள்ளதோ, எவரிடமே பிரளய காலத்தில் இது ஒடுங்குகின்றதோ, எவருக்கு கருமமென்பது லேசமும் கிடையாதோ, எவர் ஸ்வயம் ஜ்யோதியான ஆத்மாவாக விளங்குகிறாரோ, அத்தகைய சிவனே நானாவேன். நான் சிவன், நான் சிவன், நான் சிவன், நான் சிவன்.

**கிரீடே நிசேசோ லலாடே ஹுதாசோ**
**பு4ஜே போ4கிராஜோ க3லே காலிமாசா ।**
**தநௌள காமினி யஸ்ய தத்துல்யதே'வம்**
**ந ஜானே ந ஜானே ந ஜானே ॥** 38

முடியில் பிறைச்சந்திரனும், நெற்றியில் அனலும், தோள்களில் பாம்பும், கழுத்தில் கரு நிறமும், சரீரத்தில் இடதுபுறம் மங்கையையும் உடைய சிவனுக்கு நிகரான தெய்வமெதையும் நான் அறியேன். நான் அறியேன், நான் அறியேன்.

**அனேன ஸ்தவேனாத3ராத3ம்பி3கேசம்**
**பராம் ப4க்தி மாஸாத்4ய யம் யே நமந்தி ।**
**ம்ருதெள நிர்பயாஸ்தே ஜநாஸ்தம்ப ஜந்தே**
**ஹ்ருதம்போஜமத்யே ஸதாஸீனமீசம் ॥** 39

எவர்கள் மிகுந்த பக்தி உணர்ச்சியுடன் பொருள் தெரிந்து இந்த ஸ்தோத்திரத்தைப் படித்து அம்பிகையின் பதியான பரமேச்வரனை வணங்குகிறார்களோ அவர்களுக்கு மரண பயம் உண்டாகாது. எவர்கள் தங்கள் இருதய கமலத்தில் ஜோதி வடிவமாக விளங்கும் அப்பரமசிவனை வீற்றிருக்கச் செய்து அவரைப் போற்றுகின்றனரோ அவர்கள் சிவ ஸாயுஜ்யம் அடைவார்கள்.

**பு4ஜங்க3 ப்ரியா கல்ப சம்போ4 மயைவம்**
**பு4ஜங்க3ப்ரயாதேன வ்ருத்தேன கல்ருப்தம் ।**
**நர: ஸ்தோத்ரமேதத் படி3த்வோரு ப4க்த்யா**
**ஸுபுத்ராயுராரோக்3ய மைச்வர்ய மேதி ॥** 40

சம்போ, புஜங்க விருத்தத்திலமைக்கப்பட்ட இந்த ஸ்தோத்திரத்தை எவனொருவன் படிக்கின்றானோ, அவன் புத்திரன் நீண்ட ஆயுள், ஆரோக்யம், ஐச்வர்யம் முதலியவைகளை அடைவானென்பது திண்ணம்.

---

